[7th September 1960

### *Waste lands*

*** 517 Sri P. G. MANICKAM :** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) அரசாங்கத்துக்குச் சொந்தமான விவசாயத்துக்கு லாயக்காக உள்ள தரிசு நிலங்களிலே ஹரிஜன விவசாயிகளுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் நிலத்தின் விஸ்தீர்ணம் எவ்வளவு ?

(ஆ) இந்நிலங்களில் இதுவரைக்கும் ஹரிஜன விவசாயிகளுக்கு வழங்கப்பட்டிருக்கும் நிலங்கள் எத்தனை எக்கர்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) and (ஆ). The extent of cultivable waste lands reserved for Harijans for the entire state is 33,211.48 acres out of which an extent of 14,843.78 acres has been assigned to them.

SRI P. G. MANICKAM : ஒவ்வொரு ஜில்லாவிலும் எத்தனை எக்கர் பூமி ஹரிஜனங்களுக்கு கொடுக்க இருக்கிறது என்ற ஒரு குறிப்பை அனுப்பும்படியாக சர்க்கார் ஒரு அறிக்கை விட்டிருந்தது. அதன் பிறகு கனம் அமைச்சர் அவர்கள் என்னுடைய பவானி தாலூகாவுக்கு வந்தபோது சுமார் 100 எக்காராவுக்கு 2,000 பட்டாக்களை ஹரிஜனங்களுக்கு வழங்கி இருக்கிறார்கள். அப்படி ஒவ்வொரு ஜில்லாவிலும் இருக்கிறது. அப்படி ஒவ்வொரு ஜில்லாவிலும் செய்தால் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் நன்றாக வாழ வழி ஏற்படும். அதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அப்படி பட்டா வழங்குவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்வதில் சர்க்கார் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி பட்டா வழங்குவதற்கு உடனடியாக எல்லாவிதமான நடவடிக்கையும் எடுக்கப்பட்டு வருகிறது. அது சம்பந்தமாக அவ்வப்போது அதிகாரிகளுக்கு உத்தரவும் அனுப்பிக்கொண்டிருக்கிறோம். சாத்தியமான நடவடிக்கைகள் என்னென்ன எடுக்க வேண்டுமோ அவைகள் எல்லாம் எடுக்கப்பட்டு வருகின்றன.

### *Panchayats*

*** 518 Q.—Sri P. G. MANICKAM :** கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) பிளாக்குகள் (Block Development Scheme) உள்ள பிரதேசங்களிலே இன்னும் எத்தனை பஞ்சாயத்துக்கள் அமைக்க வேண்டும் ?

(ஆ) பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்படுத்தப்படப் போகும் பிரதேசங்களிலே இன்னும் எத்தனை பஞ்சாயத்துக்கள் ஏற்படுத்த வேண்டும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) The particulars required for answering the Question have been called for from the Inspector of Municipal Councils and Local Boards.